# கும்பாபிஷேக மகிமை





தமிழ்ப்பேரரறிஞர்

திருமுருக

## கிருபானந்தவாரியார்

சுவாமிகள்

40/4

# கும்பாபிஷேக மகிமை

முத்தமிழ் ரத்னாகரம்

திருமுருக **கிருபானந்தவாரியார்** சுவாமிகள்





வெளியீடு



**குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்**

132 / 107, சிங்கண்ண தெரு,
சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002.
தொலைபேசி : 044 - 2845 7666 அலைபேசி : 98408 55049
Email: **guhashri@gmail.com**; Web: **www.variyarswamigal.com**

ஏழாம் பதிப்பு : 2023 விலை : ரூ. 28

# வாழ்த்து

## நேரிசை வெண்பா

மன்னு புகழ்குகஸ்ரீ வாரி பதிப்பகம்
பன்னுபல நூல்கள் பதிப்பித்து - மின்னுவடி
வேலன் திருவருளால் மேன்மேலும் ஓங்கியே
சாலவும் வாழ்க தழைத்து.

அன்பன்

## ஆலயங்களில் செய்ய வேண்டிய அபிஷேகங்களும் அதன் பலனும்

| | | |
|---|---|---|
| 1. | பால் அபிஷேகம் | நீண்ட நாள் வாழ்வு தரும் |
| 2. | தயிர் அபிஷேகம் | நன்மக்கட்பேறு உண்டாகும். |
| 3. | நெய் அபிஷேகம் | பிறவிப்பிணி நீங்கி பேறுண்டாகும். |
| 4. | தேன் அபிஷேகம் | சத்திய வாசகம் வரும். |
| 5. | பஞ்சாமிர்த அபிஷேகம் | உறுதியான உடல் வலிமை தரும். |
| 6. | இளநீர் அபிஷேகம் | சௌபாக்கிய சுகபோகம் நல்கும். |
| 7. | எலுமிச்சம்பழச்சாறு அபிஷேகம் | பகையை அடியோடழிக்கும். |
| 8. | கருப்பஞ்சாறு அபிஷேகம் | நோய் நொடி தீரும். |
| 9. | திருமஞ்சனப்பொடி அபிஷேகம் | கடன் தீரும்; நோய் தீரும்; துன்பம் தீரும். |
| 10. | சந்தனத் தைலம் அபிஷேகம் | சுகானந்தம் தரும் |
| 11. | விபூதி அபிஷேகம் | தெய்வ சாந்நித்யம் உண்டாகும் |
| 12. | பன்னீர் சந்தனக் குழம்பு அபிஷேகம் | லெக்ஷ்மி கடாட்சம் உண்டாகும். |
| 13. | சொர்ணாபிஷேகம் | வியாபார விருத்தி லாபம் தரும். |
| 14. | வலம்புரி சங்காபிஷேகம் | தீவினைகளை நீக்கி நல்லருள் பாலிக்கும்; அன்புடன் நினைத்த காரியம் முடியும். |

த்ரிமது நிவேதனம் மிக விசேஷம்

த்ரிமது என்பது (பசுவின்) பால், நெய், தேன் மூன்றும் கலந்தது.

# கும்பாபிஷேக மகிமை

இறைவன் ஒளிமயம் ஆனவர். நமது உடம்பு இரதம், (உமிழ்நீர்) உதிரம், எலும்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம் ஆகிய ஏழு தாதுக்களால் ஆனது.

இறைவன் ஒளியே உருவாகத் திகழ்பவர்.

"சோதியே சுடரே சூழொளி விளக்கே
சுரிகுழல் பணைமுலை மடந்தை
பாதியே."

"திருவையாறு அகலாத செம்பொற் சோதி"

"ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெருஞ் ஜோதி"

"அலகில் ஜோதியன்"

"பிரமமாய் நின்ற ஜோதிப் பிழம்பதோர் மேனியாக"

"தீப மங்கள ஜோதி"

என்ற ஆன்றோர் வாக்குகளால் அறிக.

ஜோதி எங்கும் நிறைந்திருந்தாலும் கல்லிலே அதிகம் உளது. ஒரு கல்லை மற்றொரு கல் தட்டினால் நெருப்பு வருவதைக் காண்கிறோம். ஆதலால், தெய்வ வடிவங்களைக் கல்லினால் செதுக்கியமைக்கின்றார்கள்.

வேத சிவாகமங்களிலே ஆலய வழிபாட்டைப் பற்றிச் சொல்லியிருக்கிறது. இறைவன் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்து இருக்கின்றான். ஆனால், வேதாகம

மந்திரங்களினாலே நிறுவப் பெற்ற கோயில் மூலத்தானத்திலே விசேஷமாக இருக்கின்றான்.

இறைவன் தனது அகண்டா காரமான சத்தியை ஒரு விக்கிரகத்திற்குள் நிலைபெறச் செய்துகொண்டு அடியவர்களுக்கு அருள்பாலிக்கின்றான்.

வெயிலிலே பஞ்சை வைத்தால் வெப்பமான சூடு ஏறும். அதனால் வெதும்பும்; வெந்து போகாது. சூரிய காந்தக் கண்ணாடியின் கீழே வருகிற வெயிலிலே பஞ்சை வைத்தால் எரிந்து சாம்பலாகிப் போகும். நேர் வெயிலுக்குப் பஞ்சைக் கொளுத்துகிற ஆற்றல் இல்லை. சூரிய காந்தக் கண்ணாடியின் கீழே வருகிற வெயிலுக்குப் பஞ்சை எரிக்கிற ஆற்றல் உண்டு. என்ன காரணம்?

பரந்து விரிந்து இருக்கின்ற சூரிய ஒளியை ஈர்த்துச் சேர்த்து அனுப்புகிறது சூரிய காந்தக் கண்ணாடி.

அதுபோல், எல்லா இடங்களிலும் பரந்து விரிந்து இருக்கின்ற இறைவனுடைய சத்தியை ஈர்த்துச் சேர்த்து அனுப்புகிறது மூலத்தானத்திலுள்ள மூர்த்தி.

ஏனைய இடங்களில் இறைவனை வழிபட்டால் வினைகள் வெதும்பும். ஆலயத்திலுள்ள மூர்த்திக்கு முன் வழிபட்டால் வினைகள் வெந்து போகும். அதனாலேதான் ஔவையார்,

*"ஆலயந் தொழுவது சாலவும் நன்று"*

என்கின்றார்.

ஆகவே, நாயன்மார்களும் ஆழ்வாராதிகளும் ஞானி களும் இந்த உலகம் உய்ய அமைத்தவை ஆலயங்கள்.

அந்த ஆலயத்திலே கருவறையில், சுவாமி மந்தர வடிவாக இருந்து, ஆன்மாக்களுடைய மலமாயா கன்மங்களை நீறாக்கி அருள்புரிகின்றான்.

மந்திர ஒலிக்கு ஆற்றல் அதிகம். மந்திரம் சொன்னால் பாம்பு கடிக்காது, கடித்த விஷம் இறங்கும். சில திருடர்கள் மந்திரம் சொன்னால் நாய் குரைக்காதாம்.

ஆகையினால்தான், பெரியவர்கள் வேத மந்திரத்தி னாலே இறைவனை வழிபட்டார்கள்.

*வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாக*
*போதத்தால் வழிபட்டார் புள்ளிருக்கும் வேளூரே.*

என்பது அப்பர் பெருமான் வாக்கு.

ஆகவே, கோயிலிலே சென்று சேவிக்க வேண்டும். இறைவனுடைய அருளைப் பெற்ற மகான்களாக இருந் தாலும் ஆலய வழிபாடு அவசியம் செய்ய வேண்டும்.

*மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்*
*வார்த்தைசொல சற்குருவும் வாய்க்கும் பராபரமே.*

என்பார் தாயுமானார்.

*கால்களாற் பயனென் கறைகண்டன் உறை கோயில்*
*கோலக் கோபுரக் கோகரணஞ் சூழாக்*
*கால்களாற் பயனென்*

என்பார் அப்பர் பெருமான்.

*மாலற நேயம் மலிந்தவர் வேடமும்*
*ஆலயந் தானும் அரனெனத் தொழுமே.*

என்பது சிவஞான சூத்திரம். நால்வராதிகள் எல்லாம் தலயாத்திரை மேற்கொண்டு ஆலய தரிசனம் செய்து வழிபட்டார்கள்.

ஆண்டவன் ஜோதி வடிவானவன் என்று முன்னர் பார்த்தோம். அந்த ஜோதியின் சத்தி கல்லிலே மிகுதி யாக உண்டு என்றும் கண்டோம். ஒரு கல்லை ஒரு கல்லால் அடித்தால் ஒளி வரும்.

ஆகவே, கல்லினால் திருவுருவத்தை அமைத்துத் தானிய வாசம், ஜலவாசம் வைத்து அந்த மகா தேவனுடைய மந்திரங்களை எழுதி, மந்திர யந்திரத்தை 48 நாள் வழிபாடு செய்து, அதை அந்த மூர்த்திக்குக் கீழே வைப்பார்கள். அந்த மந்திர சத்தி மேலே வரும். அந்த வேத சிவாகமத்திலே வல்லவர்களாக இருக்கின்ற அந்தணர்கள் யாகசாலை அமைத்து இனிய மந்திரங் களை ஓதி காலங்கள்தோறும் யாகாக்னி வளர்த்து அதில் ஜோதியை விளையுமாறு செய்கின்றார்கள். அப்படி விளைந்த ஜோதியைக் கும்பத்திலே சேர்ப்பார்கள்.

கல்லினாலும் மண்ணினாலும் சுதையினாலும் மனிதனால் உருவாக்கப்பட்டவை விக்கிரகங்களாகும். அவற்றிற்குத் தெய்வ சாந்நியத்தை உண்டு பண்ணு வதற்காகச் செய்யப்படும் பல கிரியைகளில் ஒன்றுதான் கும்பாபிஷேகம்.

சுருக்கமாகச் சொல்வதானால், மனிதன் அங்கிங்கெனாதபடி எங்கும் நீக்கமற நிறைந்து விளங்கும் இறைவனை ஆன்மாக்கள் உணர்வுக்குப் புலனாகும்

நிலையில் உணர்த்தப்படும்போது மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், சூரியன், சந்திரன், ஆன்மா என்ற எட்டுக் குணங்களை இறைவடிவாக உணர்கின்றான். இப்படி எண்குணனாகி எங்கும் வியாபித்திருக்கும் பரம் பொருளை ஓரிடத்தில் பிரகாசிக்கச் செய்யும் பொருட்டு, மண் வடிவாகக் குடத்திலும், நீர் வடிவாகக் கும்ப தீர்த்தத்திலும், தீ வடிவாக ஓம குண்டத்திலும் காற்று வடிவாக ஒலியின் விரிவிலும், ஆதித்ய வடிவாக ஒளியிலும், சந்திரன் வடிவாக மனத்தின் குழைவாலும், ஆன்ம வடிவாக உயிர்களின் ஒருமித்த கூட்டுப் பிரார்த்தனையால் வழிபாடு செய்து ஓரிடத்தில், (குறிப்பிட்ட மூர்த்தி பிம்பத்தில்) நிலைபெறச் செய்தலே கும்பாபிஷேகத்தின் தத்துவமும் மகிமையுமாகும்.

பொதுவாக, திருக்கோயில்களில் விக்கிரகங்களை நிர்மாணம் செய்வதை நான்கு வகையாக்குவர்.

1. முதன் முதலாகத் திருக்கோயிலை ஸ்தாபித்து அதில் புதிய விக்கிரகத்தை நிர்மாணிப்பது **ஆவர்த்தம்** எனப்படும்.

2. இயற்கைச் சீற்றங்களான மழை, வெள்ளம்,புயல், பூகம்பம் முதலியனவற்றால் அழிந்த கோயில்களைப் புதுப்பிப்பது **அநாவர்த்தம்** எனப்படும்.

3. காலத்தால் சிதலமடைந்த பழைய கோயில்களைச் சீராக்குவது **புனராவர்த்தம்** எனப்படும்.

4. ஆலயங்களில் நடக்கக் கூடாத ஆநாசாரங்கள் ஏற்பட்டால் (திருடர்களால், மிருகங்களால் இடர் ஏற்பட்டால், யாராவது எதிர்பாராவிதமாக இறந்து

விட்டால்) செய்யப்படுவது சாந்தி **சம்ப்ரோக்ஷணம்** எனப்படும்.

நிர்மாண (பிரதிஷ்டைக்குரிய) கிரியைகள் 64 என்றும், 55 என்றும், சிற்சில ஆகமங்களில் கூறப் பட்டுள்ளன. இவற்றில் மிக முக்கியத்துவம் வாய்ந்தவை 13 கிரியைகள். இந்தப் பதின்மூன்று கிரியைகளும் இல்லாமல் எந்தக் கும்பாபிஷேகமும் நடைபெற இயலாது.

இனி, அந்தப் பதின்மூன்று நிர்மாணக் கிரியைகள் பின்வருமாறு அமையும்.

1.அனுக்ஞை: கும்பாபிஷேகத்தை முன்னின்று நடத்தி வைப்பதற்குத் தகுதி வாய்ந்த ஒருவரை (கர்த்தாவை) பொதுமக்கள் தேர்ந்தெடுத்து ஆண்ட வனிடம் அனுமதி பெறுவது.

2.விக்னேஸ்வர பூஜை: தொடங்கிய காரியம் விக்கினமின்றி முடியும் பொருட்டுப் பிரணவ சொரூபரான விநாயகப் பெருமானை வழிபடுவது. இதற்குக் கணபதி ஹோமம் செய்வதுண்டு. இக்கிரியையில் அக்னிகாரியம் அவசியம் என்று ஆகமங்கள் வற்புறுத்துகின்றன.

3.வாஸ்து சாந்தி: சிவமகா புராணத்திலும், ஆகமங் களிலும் வாஸ்து புருஷனைப பற்றிக் கூறப்பட்டிருக்கிறது.

சிவபெருமானின் அட்டவீரட்டானத்தில் (எட்டு வீரச் செயல்களில்) அந்தகாசுர வதமும் ஒன்றாகும்.

அந்த அந்தகாசுர யுத்தத்தில் கோபங் கொண்ட சிவமூர்த்தியின் வியர்வை நிலத்தில் விழ, அதனின்றும்

மூவுலகங்களையும் விழுங்கத்தக்க ஒரு பூதம் தோன்றியது. அது சிவாக்ஞையால், அந்தகாசுரனுடைய உதிரத்தைக் குடித்தது.

பின்னர் சிவபெருமானைக் குறித்துத் தவம் இருந்து பல வரங்களைப் பெற்று உலகத்தை வருத்தியது.

அமரர்கள் ஸ்ரீகண்டமூர்த்தியாகிய முக்கண்ணனிடம் முறையிட்டனர்.

அவர் அதிபலன் என்பவரை ஏவினார். அதிபலன் அந்தப் பூதத்தை மாயா பாசங்களால் கட்டிக் கீழே தள்ளி, அவ்வுடம்பின் மீது 53 தேவதைகளை வசிக்கச் செய்தார். அவர்களும் அந்தப் பூதத்துக்குக் கெடுதி செய்யாமல் அதனைப் பாதுகாத்து வருகின்றனர்.

தேவர்கள் அவன்மீது வசித்ததால் அவனுக்கு வாஸ்து புருஷன் எனப் பெயராயிற்று.

இந்த வாஸ்து புருஷனால் கும்பாபிஷேகக் கிரியை களுக்குக் கெடுதி வராதிருக்க, அந்த 53 தேவதை களுக்குப் பூஜை, பலி, ஹோமம் ஆகியவற்றால் சாந்தி செய்யும் கிரியையே வாஸ்து சாந்தி எனப்படும்.

4. மிருத்ஸங்கிரஹணம்: அதாவது மண் எடுத்தல். (புற்று மண் எடுத்தல் என்றும் கூறுவர்) அங்குரார்ப் பணத்துக்குத் தேவையான மண்ணைக் குறிப்பிட்ட திக்கு, இலட்சணம் உள்ள இடத்திலிருந்து வெட்டியெடுத்து, அப்பள்ளத்தில் ஏழு கடலால் அபிஷேகம் செய்வதாகும்.

மண் வெட்டுவதற்கு முன்னர் பூமாதேவியையும், அவளுக்கு அதிபர்களான பிரமன், அஷ்டதிக்குப்

பாலகர்கள் இவர்களை வழிபட்டுப் பூமியை வெட்ட வேண்டிய அவசியத்துக்கு மன்னிப்புக் கோரி, அவர்களிடம் உத்திரவு பெற்று, பின்பு மண்ணை எடுக்க வேண்டும்.

ஏழுகடல் அபிஷேகமாவது, பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன், உவர்நீர், நன்னீர் என்பவையாகும்.

உவர் நீருக்குப் பதிலாக இளநீரை உபயோகிப் பார்கள். இவற்றை வெட்டிய பள்ளத்தில் மந்திரக்கிரியா பூர்வமாக விட வேண்டும். மண்வெட்டியின் அளவு, அதன் பிடி, அது எந்த மரத்தால் செய்யப்பட்டிருக்க வேண்டும். மண்ணை ஏந்தும் பாத்திரம் இவற்றின் இலட்சணம் இவை யாவும் சாத்திரங்களில் சொல்லப் பட்டிருக்கின்றன.

5. அங்குரார்ப்பணம்: இதற்கு முளையிடுதல் என்பது பொருளாகும். எடுத்த மண்ணை உரிய மந்திரத்தோடு, பாலிகைகளில் இட்டு, நவதானியங்களைத் தெளித்து முளைப்பாலிகை அமைப்பது. இது செய்ய இருக்கும் கிரியைகளின் தன்மைகளை அறிவதற்காக ஏற்பட்டது. முளை பசுமையாக ஓங்கி வளர்ந்தால் கிரியைகள் சீராக நடந்தன என்று பொருள். அப்படியில்லையாயின் மந்திர தோஷம், செயல்களில் குறைபாடு ஆசௌசம் இருப்ப தாக உணர்ந்து அதற்குத் தகுந்த பிராயச் சித்தங்களைச் செய்ய வேண்டும் என்பது ஆகம விதியாகும்.

6. ரக்ஷாபந்தனம்: இதற்குக் காப்புக் கட்டுதல் என்பது பொருள். கும்பாபிஷேகத்தை முன்னின்று செய்யும் கர்த்தா, ஏனைய சிவாச்சாரியார்கள் இவர்களுக்கு

இடையூறு நேராமலிருக்க அபிமந்திரித்த மஞ்சள் கயிற்றை வலக்கை மணிக்கட்டில் அணிவித்தல், கும்பாபிஷேகத்தில் கலந்து கொள்ளும் சிவாச்சாரி யார்களுக்குத் தெய்வாதீனமாய் ஆசௌசம் ஏற்பட்டால், காப்பு அவிழ்க்கப்படும் வரையில் அந்த ஆசௌசம் அவர்களைப் பாதிக்காது.

7. கும்பஸ்தாபனம்: இந்தக் கிரியைதான் கும்பாபி ஷேகத்தில் அதி முக்கியத்துவம் வாய்ந்தது. கலசம் நிறுவுதல் என்பது இதன் பொருளாகும். தங்கம், வெள்ளி, தாமிரம், மண் இவற்றில் ஏதாவதொன்றால் ஆனதாயும், குறிப்பிட்ட அளவு உள்ளதாயும், ஒச்சம் (பின்னம்) இல்லாததாயும், அழகாக அமைந்ததாயும் இருக்கும்.

கலசங்களைத் தேவையான எண்ணிக்கைக்குத் தகுந்தபடி தேர்ந்தெடுத்து அவற்றில் சிற்ப தோஷம் நீங்கும்படி அபி மந்திரித்து அக்கினியில் காட்டி செம்மண் மேலே பூசி, நூலால் சுற்றிப் பரிசுத்தமான ஆற்றுநீர் அல்லது ஊற்று நீரால் நிரப்பி, மாவிலைகளைச் செருகி, அதன்மீது நல்லதொரு தேங்காயை வைத்து, கும்பத்திற் குள் நவரத்தினங்களையும் தங்கம் வெள்ளி இவைகளை யும் இட்டு, வஸ்திரம் அணிவித்து, புஷ்பம், சந்தனம், விபூதி, குங்குமம் முதலியவை அணிவித்துத் தானியங் களைப் பரப்பி அதன் மீது கலசத்தை வைக்க வேண்டும், மேலும், தர்ப்பைக் கூச்சம் தேங்காயின் மீது வைக்க வேண்டும், கலசத்தை இறைவனின் வித்யா தேகமாகக் கருத வேண்டும். எந்த மூர்த்திக்குக் கும்பாபிஷேகம் செய்கின்றோமோ அந்த மூர்த்தியின் வித்யாதேகம் (ஞானசொரூபம்) இதுவாகும்.

எப்படியெனில், தேங்காய் சிரசாகவும், மாவிலை சிகை (தலைமுடி) யாகவும், கும்பவஸ்திரம் தோலாகவும், கும்பத்துக்குப் பூசப்படுகின்ற செம்மண் இரத்த மாகவும், குடத்தின் உலோகம் மாமிசமாகவும், கும்ப தீர்த்தம் மேதையாகவும், கும்பத்தில் சுற்றப்பட்ட நூல் நரம்பாகவும், கும்பத்திலிட்ட நவரத்தினஙகள் சுக்கில மாகவும், நியாசம் செய்யப்பட்ட மந்திரம் உயிராகவும், கும்பத்தடியில் இடப்படும் தானியம் ஆசனமாகவும் பாவித்திட வேண்டும்.

8. கலாகர்ஷணம்: கும்பாபிஷேகம் செய்யப்படும் மூர்த்தயின் கலையை.(சத்தியை) ஆகர்ஷித்தல் என்று பொருள். அலங்காரம் செய்யப்பட்ட கும்பத்தைக் குறிப்பிட்ட இறைவனின் (இறைவியின்) முன்னே வைத்து, அந்தத் தேவதையை, வித்யா தேகமாகிய கும்பத்தில் இறக்கிக் குறிப்பிட்ட காலம் வரையில் அதில் ஆவிர் பவிக்கும்படி மந்திரம், கிரியை பாவனைகளால் பிரார்த்தித்து,அத்தேவதையின் கலையைக் கும்பத்தில் ஆகர்ஷித்து அந்தக் கலசத்தைச் சத்பாத்திரமான ஆசாரியன் தலையில் எழுந்தருளப் பண்ணி, சகல உபசாரங்களுடன் ஆலயத்தை வலம்செய்து யாக சாலைக்குக் கொண்டுவர வேண்டும்.

உபசாரங்களாவன சகலவிதமான வாத்திய கோஷங்கள் நான்குவேத பாராயணம், திருமுறை ஓதல், சாமரம், குடை, கொடி விதானம், மங்கள தீபம், தீவர்த்தி இவைகளோடு அழைத்து வரும் போது, வாசனைப் பொடி, சந்தனம், பன்னீர் இவற்றைத் தெளித்துக் கொண்டு வர வேண்டும். எட்டு மூலைகளிலும் (திசைகளிலும்)

தேங்காய் சிடலையிட்டுக் கற்பூரம் காட்ட வேண்டும்.

9. யாகசாலை: ஆலயத்தின் வடமேற்கு மூலை தவிர, வேறு திக்குகளில், ஏதாவது ஒன்றில் யாகசாலை அமைக்க வேண்டும் வடகிழக்கு மூலை (ஈசானமூலை) உத்தமாகக் கருதப்படுகின்றது. அதன் பரப்பளவு 3 முதல் 13 முழங்களாகவோ, 20 அல்லது 32 முழங்களாகவோ சதுரமாக அமைக்க வேண்டும்.

இந்த யாகசாலையில் இரண்டு காலம் முதல், ஆறுகாலம் வரையில் ஹோமம், பலி, தியானம், பூஜை முதலியவற்றால் ஆராதனை செய்தல் வேண்டும். தூப தீப சோடச உபசாரங்கள், வேத பாராயணம், திருமுறை ஓதுதல் முதலியவற்றோடு ஒருகால பூஜை நிறைவுறும். இவ்வாறு 3, 5, 7 அல்லது 9 தினங்கள் சத்திக்குத் தக்கபடி யாகசாலை பூஜைகள் நடத்தலாம்.

இவ்வாறு பூஜை செய்வதன் மூலம் பிரதான கலசங்களில் ஆகர்ஷணம் செய்யப்பட்ட இறைவன், ஏனைய தேவதைகள் யாவரும் அந்தந்தக் கலசங்களில் தமது பூர்வ கலைகளோடு சாந்நித்தியமாகின்றார்கள். மந்திரங்களோடு செய்யப்படும் கிரியைகளால் ஏற்படும் சூட்சும சலனங்களால், குறிப்பிட்ட தேவதாம்சம் குறிப்பிட்ட கலசத்தில் ஆர்பவிக்கின்றது.

10. ஸ்பர்சாஹீதி: ஹோமங்கள் முடிவுற்றதும், இறைவன் கலசத்தில் தனது பூர்ணகலைகளோடு ஆர்பவித்து விட்டான். நமது வேண்டுகோளுக் கிணங்கித் தன் இச்சையாலே தனது முழு சத்தியையும் கலச தீர்த்தத்தில் செலுத்தியிருக்கின்றான். இந்தச்

சத்தியைத் திரும்பவும் விக்கிரஹத்தில் சேர்க்கும் கிரியைக்கு ஸ்பர்சாஹுதி என்று பெயர்.

யாகசாலையில் இருக்கும் கலசத்திற்கும் விக்கிரஹத்திற்கும் தங்கக்கம்பி, வெள்ளிக்கம்பி அல்லது தர்ப்பைக் கயிறு மூலம் இணைப்பு ஏற்படுத்தி யாகசாலையில் செய்யப்பட்ட ஹோமங்களையும், தத்துவங்களையும், தத்துவ அதிபர்களையும் விக்கிரஹத்தில் சேர்த்தல் ஸ்பர்சாஹுதி எனப்படும். இந்த இணைப்புக்கு நாடீ சந்தானம் என்றும் பெயர்.

11. கும்பாபிஷேகம்: பிரதான கலசத்தை ஆசாரியன் தலையில் எடுத்துக்கொண்டு சகல விதமான உப சாரங்களுடன் ஆலயத்தை வலம் வந்து மூல ஸ்தானத் திற்குள் நுழைந்து, கலசத்தை மூல விக்கிரகத்தின் முன் வைத்து உலகத்தின் ஆவிர்பவித்திருக்கும் இறைவனை விக்கிரகத்தில் கூடும்படி மந்திர பூர்வமாய்ப் பிரார்த்தித்து, அந்தக் கலச நீரை விக்கிரகத்துக்கு அபிஷேகம் செய்ய வேண்டும்.

அதனால் கல்லாலும் மரத்தாலும் சுதையாலும் உலோகத்தாலும் ஆன வடிவங்கள் இறைவனின் பூர்ண கலைகளையும் தாங்கும் ஸ்தானமாகின்றன. இறைவனுடைய சத்தியைக் கிரகிப்பதால் அவை விக்கிரஹங்கள் எனப்படுகின்றன. அதில் 'வி' என்னும் எழுத்து சிரேஷ்டமானது. சிறந்தது என்ற பொருளில் வந்தது. இறைவனின் விசேஷமான பிரதிநிதி என்றும் சொல்லலாம். இது போன்றே ஆலயத்திலுள்ள ஏனைய பரிவார தேவதைகளுக்கும், கோபுர ஸ்தூபிகளுக்கும்

மந்திர பூர்வமாய் அதற்கு ஏற்பட்ட கலசங்களில் மந்திர தீர்த்தங்களை அபிஷேகம் செய்வதால் ஆலயம் இறைவனின் வீடாக (ஆலயமாக) ஆகிவிடுகின்றது.

விக்கிரஹத்தை எழுந்தருளப் பண்ணியிருக்கும் பீடத்துக்கும் வடிவத்துக்கும் இணைப்பு ஏற்படுத்தும் எட்டுச் சரக்குகளை மந்திர பூர்வமாகச் சேர்க்கப்படும் மருந்துக்கு அஷ்டபந்தனம் என்று பெயர்.

அஷ்டபந்தனம் செய்யப்பட்டால் ஸ்பர்சாஹுதிக்கு முன்னும் அஷ்டபந்தனத்துக்குப் பின்னும் பிம்ப சுத்தி என்ற கிரியை செய்ய வேண்டும். குறிப்பிட்ட சில வேர்களும் சேர்ந்த ஒரு குழம்பால் வடிவத்தைச் சுத்தி செய்தல் பிம்ப சுத்தி எனப்படும்.

12. மகாபிஷேகம்: கலச நீரால் அபிஷேகம் செய்தபின் விக்கிரகத்திற்குப் பூர்ணாபிஷேகம் செய்து, பூர்ண நைவேத்தியம் படைத்து, சோடசோபசாரம் செய்ய வேண்டும். இதனால் இதுவரை யாகத்தில் பங்கு கொண்டிருந்த தேவர்களும் உயிர்களும் திருப்தியடைகின்றனர். இது மகாஅவிர் நிவேதனமாகும்.

13.மண்டலாபிஷேகம்: இதற்கு த்ரைபக்ஷிகம் என்று பெயர் மூன்று பட்சங்கள் (பதினைந்து தினம் - ஒரு பட்சம்) முறைப்படி விசேஷமாய் ஆராதனை நடத்தி முடிவில் பூர்ணாபிஷேகம் செய்து பின் காப்புக் களைதல் மண்டலாபிஷேகமாகும்.

இவ்வாறு ஆகமங்களில் விதிக்கப்பட்ட முறைப்படி கும்பாபிஷேகம் செய்தால் இறைவன் தன் பரம கருணையால் குறிப்பிட்ட விக்கிரத்தில் அவதரித்துப்

பூரண கலையுடன் நித்தியவாசம் செய்கின்றார்.

ஒருவன் தன் ஆயுட்காலத்தில் மூன்று கும்பாபிஷேகத்தைச் சேவித்தால் அவனுடைய பாவங்கள் நசித்து விடுகின்றன என்று சுருதிகள் சொல்லுகின்றன.

அந்தக் கும்பாபிஷேகத்திற்கு முந்தி அது கல், கும்பாபிஷேகம் ஆன உடனே அது கடவுள்.

காகிதத்தைக் கரன்சி நோட்டாக மாற்றுகின்றார்கள் ஆற்றலுடைய அரசாங்கத்தார்.

மண்ணைக் கடமாக மாற்றுகின்றார்கள்.

இரும்பை ஒலிபெருக்கியாக மாற்றுகின்றார்கள். அதுபோல, அருளாளர்கள் கல்லைக் கடவுளாக மாற்றுகின்றார்கள்.

கும்பாபிஷேகம் வாழ்நாளில் கிடைத்தற்கரிய ஒரு வாய்ப்பாகும். கும்பாபிஷேகத்தைச் சேவித்தவர்களுக்குத் திருவருள் நிரம்பத் துணை செய்யும்.

ஒருவர் நியாயமாகக் கணக்கு எழுதி, நியாயமாகச் செலவழித்து, நியாயமாக வரிகட்டி வியாபாரம் பண்ணினார். அவருக்கு மாதம் ஆயிரத்து நானூறு ரூபாய் வருமானம். பன்னிரண்டு ஆண்டுகள் வியாபாரம் பண்ணினார். இரண்டு லட்சத்து ஓராயிரத்து அறுநூறு ரூபாய் கிடைத்தது. இந்தக் காலத்திலே தனியாரிடத்தில் கொடுத்தால் வராது. வங்கியிலே போட வேண்டும். இரண்டாயிரம் ரூபாய் வட்டி வரும். சைவர்களுக்குப் போதும். பன்னிரண்டு ஆண்டு பாடுபட்டு இரண்டு லட்சம் சேர்த்தார்.

இன்னொருத்தர் கிணறு வெட்டினார். ஓர் அண்டா கிடைத்தது. எடுத்துப் பார்த்தால் தங்க டாலர்கள். கொண்டுபோய் விற்றார். டாலர் ஒன்றுக்கு ஆயிரம் ரூபாய். இருநூறு டாலருக்கு இரண்டு லட்ச ரூபாய் வந்தது. பன்னிரண்டு ஆண்டுக்காலம் இரவு பகலாகப் பாடுபட்டவருக்கு இரண்டு லட்ச ரூபாய் சேர்ந்தது. பாடுபடாமலே, நெற்றித் தண்ணீர் நிலத்தில் விழாமலே கிணறு வெட்டியவருக்கு இரண்டு லட்ச ரூபாய் வந்தது.

அதுபோல், பன்னிரண்டு ஆண்டுகள் ஆலயத்திற்குச் சென்று இறைவனை மன மொழி, மெய்களினாலே வழிபட்டவருக்கு என்ன என்ன அருள் வருமோ, அத்தனை அருளும் கும்பாபிஷேகத்தைச் சேவித்த ஒரு விநாடியில் வரும். புதையல் எடுத்துத் தனவந்தன் ஆவதுபோல், கும்பாபிஷேகம் சேவித்தவருக்குத் திருவருள் கைகூடி வரும். ஆகவே, கும்பாபிஷேகத்தைச் சேவிப்பது மிக மிக இன்றியமையாதது. எல்லோருக்கும் அந்த வாய்ப்பு கிடைக்காது.

திருமயிலாப்பூரிலே சிவநேசஞ் செட்டியார் என்றொரு தனவந்தர் வாழ்த்து வந்தார். அவருடைய பெண் பூம்பாவை ஏழு வயதிலே அரவந் தீண்டி மாண்டு விட்டாள். அவளுடம்பைத் தகனஞ் செய்து, சாம்பலைப் புதிய மண் ஏனத்திலே வைத்துப் பார்த்துப் பார்த்து அழுத வண்ணம் இருந்தார்.

*"கடந்த ஞானிகளும் கடப்பரோ மக்கள்மேல் காதல்"*

என்பது மேலோர் வாக்கு.

அங்கே திருஞானசம்பந்த சுவாமிகள் எழுந்தருளினார்.

பதினாறு வயது அவருக்கு. அவர் ஞானத்தின் திருவுரு. நான்மறையின் தனித் துணை. வானத்தின் மிசையன்றி மண்ணில் வரும் மதிக்கொழுந்து.

"பெருமானே வருக, வருக, வருக" என்று சிவநேசஞ் செட்டியார் ஞானசம்பந்தருக்கு வரவேற்புக் கொடுத்து அழைத்துப் போனார்.

கற்பகவல்லித் தாயாரையும் கபாலீஸ்வரரையும் சேவித்தார். கோவிலுக்கு வெளியே வந்தவுடன் அந்த எலும்பும் சாம்பலும் அடங்கிய மண் ஏனத்தை வைத்து அழுது தொழுது உருகி நின்றார்.

"செட்டியார் இது என்ன?" என்று ஞானசம்பந்தர் வினவுகின்றார்.

அதற்குச் சிவநேசர், "சுவாமி, அடியேனுக்குக் குழந்தை இல்லை. நீண்ட காலம் தானம், தருமம், தவம் செய்தேன். ஆண்டவன் அருளினாலே, என் மனைவியின் மணிவயிறு வாய்த்துப் பெண் குழந்தை பிறந்தது. பூம்பாவை என்று பெயர் வைத்தேன். இலட்சுமியைப் போலிருக்கும் என் மகளை உங்களுக்குத் தருவதாகப் பிரகடனம் செய்தேன். தாங்கள் தீண்டவில்லை. அரவந் தீண்டி மாண்டுவிட்டது. சுவாமி, நான் கொடுத்து வைக்காத பாவி. தேவரீருக்குத் தருவதாக நான் நிச்சயித்திருந்தேன். அதனாலே இந்த எலும்பும், சாம்பலும் தங்களது உடைமை. உடைமையை உடையவரிடத்திலே ஒப்புவித்தேன்" என்று கூறி அழுதார்.

அப்போது வேற்றுச் சமயத்து முனிவர்கள் நின்று வேடிக்கை பார்க்கின்றார்கள், என்ன நடக்கிறதென்று. திருஞானசம்பந்தர் சொன்னார், "செட்டியார் உங்கள் குழந்தை பிழைக்கும். இந்த உடம்புதானே அழிந்தது. ஆத்மாஅழியாதது அல்லவா?" என்று கூறினார்.

பின்னர், சாம்பல் நிறைந்த மண் ஏனத்தைப் பார்த்து, "அம்மா பூம்பாவை, மண்ணுலகத்திலே பிறந்தவர்கள் பெறுகின்ற பயன் இரண்டு உண்டு. என்னென்ன பயன்?.

ஒன்று, மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல்.

மதிசூடும் - தட்சனுடைய சாபத்தாலே மெலிந்து நலிந்து தேய்ந்துபோன சந்திரன் அடியிலே விழுந்தான். அடியிலே விழுந்தவனை முடியிலே வைத்தாராம். அடியிலே விழுந்தால் மடியிலேதானே வைக்கணும். முடியிலே வைத்தாராம். சிவபெருமானைச் சரணாகதி அடைந்தால் ஒரே லிப்ட் மாதிரி மேலே தூக்கி விடுவார்.

சந்திரனைச் சூடிய சிவபெருமானின் அடியார்களை அழைத்து வந்து, அவர்தம் பாத பங்கயங்களைக் கழுவி, உபசரித்து விருந்தூட்டிப் பரமான்னம் தரவேண்டும்.

இரண்டு, கண்ணினாலவர் நல்விழாப் பொலிவ கண்டார்தல்.

கண் கிடைத்த பயனாக அவனது திருவீதியுலாவைக் கண்டு சேவிக்க வேண்டும்.

இந்த இரண்டும் உண்மையானால் அம்மா நீ பிழைக்க வேண்டும்.

*மண்ணினில் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும்*
*அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல்*
*கண்ணினாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்தல்*
*உண்மையாமெனில் உலகர்முன் வருகென உரைப்பார்*

என்றெல்லாம் கூறிய சம்பந்தர்,

*ஐப்பசி ஓண விழாவும் ............................*
*காணாதே போதியோ பூம்பாவாய். (ஐப்பசி)*

*கார்த்திகை நாள் ..............................*
*விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்*
*(கார்த்திகை)*

*ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்*
*(மார்கழி)*

*தைப்பூசங் காணாதே போதியோ பூம்பாவாய்*
*(தை)*

*நடம்ஆடல் காணாதே போதியோ பூம்பாவாய்*
*(மாசி)*

*பங்குனி உத்திரநாள்*
*ஒலிவிழாக் காணாதே போதியோ பூம்பாவாய்*
*(பங்குனி)*

என்று பாடுகின்றார்.

பின்னர், அம்மா பூம்பாவை, உன் அப்பா ஆயிர மாயிரம் பேருக்கு அன்னதானம் பண்ணுவாரே, அதைப் பார்க்காமல் போய் விட்டனையே.

*மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்*
*கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமந்தான்*

*ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தார்க்கு*
*அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.*

*(புரட்டாசி)*

என்று பாடிக் கொண்டே வருகின்றார்.

அந்தக் காலத்தில் உள்ள எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லாம் எள்ளி நகையாடுகின்றார்கள்.

அப்போது பரமஞான குருவாகிய திருஞானசம்பந்தர், "அம்மா பூம்பாவை, உன் அப்பா மகா கும்பாபிஷேகம் செய்யப் போகின்றார். ஆயிரமாயிரம் ஆதி சைவப் பெருமக்கள் வந்து ஞானாக்கினி வளர்த்துச் செய்யப் போகின்ற அந்த மகா கும்பாபிஷேகத்தைப் பார்க்காமல் போயினையே அம்மா.

*உரிஞ்சாய வாழ்க்கை அமணுடையைப் போர்க்கும்*
*இருஞ்சாக் கியர்கள் எடுத்துரைப்ப நாட்டில்*
*கருஞ்சோலை சூழ்ந்த கபாலீச் சரத்தான்தன்*
*பெருஞ்சாந்தி காணாதே போதியோ பூம்பாவாய்.*

பெருஞ்சாந்தி என்றால் கும்பாபிஷேகம் என்று பொருள்.

கும்பாபிஷேகம் என்று சொன்னவுடனே, குடம் வெடித்துப் பன்னிரண்டு வயது பெண் வெளியே வந்தாள். அந்தக் குழந்தை மறைகின்றபோது ஏழு ஆண்டு. இப்போது குடத்திலிருந்து வெளியே வரும்போது பன்னிரண்டாண்டு. எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லாரும் 'ஆ' என்றனர். மூக்கின்மேல் விரலை வைத்தனர். அப்பா அம்மாவுக்கு எப்படியிருக்கும்?

எலும்பைப் பெண்ணாக்குகின்ற ஆற்றல் அந்தக் கும்பாபிஷேக சப்தத்திற்கே உண்டு.

நம்முடைய பழைய அரசர்கள் தங்களது அரண் மனையைப் பெரிதாகக் கட்டாமல் அரன்மனையைப் பெரிதாகக் கட்டினார்கள். அரண்மனை காவலோடு கூடியது. அரன்மனை அருளோடு கூடியது.

இன்றைக்கு இராஜராஜ சோழனுடைய அரண்மனை இல்லை. அவன் கட்டி வைத்த பெரிய கோவில் இருக்கிறது.

எனவே, நம்மால் முடிந்த அளவுக்கு ஆலயத் திருப்பணிகள் செய்ய வேண்டும்.

*புல்லினால் கோடி யாண்டு*
*புதுமண்ணால் பத்துக் கோடி*
*செல்லுமா ஞாலந் தன்னில்*
*செங்கல்லால் நூறு கோடி*
*அல்லியங் கோதை பங்கன்*
*ஆலயம் மடங்கள் எல்லாம்*
*கல்லினால் புதுக்கி னோர்கள்*
*கைலைவிட் டகலா ரன்றே.*

மஞ்சம் புல்லினால் கோயில் கட்டினால் கோடி வருடமும்,

மண்ணால் கோயில் கட்டினால் பத்து கோடி வருடமும்,

செங்கல்லால் கோயில் கட்டினால் நூறு கோடி வருடமும் கைலாசத்திலிருக்கலாம்.

ஆனால், கருங்கல்லினால் கோயில் கட்டினவர்கள் கைலாசத்தைவிட்டு அகலவே மாட்டார்கள்.

எத்தனை எத்தனையோ வகையில் நாம் பணத்தைச் செலவழிக்கின்றோம். திருமணம், சஷ்டியப்த சாந்தி என்று லட்ச லட்சமாய் செலவழிக்கின்றோம். அது அன்றோடு சரி. பெருமானுக்குத் திருப்பணி செய்தால், அது ஆயிரம் ஆண்டுகள் இருக்கும். லட்சம் லட்சம் பேர்கள் வழிபடுவார்கள். இன்றைக்குத் திருத்தணி, திருச்செந்தூர், பழனி முதலிய தலங்களுக்கு எத்தனை லட்சம் பேர் வந்து வழிபட்டு நலம் பெற்றவர்கள் எல்லாம் மறுபடியும் செல்கின்றார்கள்.

ருசி கண்ட பூனை உரி தாவும். தேன் பாட்டில் என்றால் ஈ, எறும்பு வந்து மொய்க்கும். வரவர மக்கள் ஆலயத்திற்குச் சென்று வழிபடக் காரணம், நினைத்தது நடக்கின்றது. கேட்டது கிடைக்கின்றது. ஆண்டவன் கேட்டதெல்லாம் வரையாது வழங்குவான்.

*"வேண்டும் அடியர் புலவர் வேண்ட அரிய பொருளை*
*வேண்டு மளவில் உதவும் பெருமாளே"*

*"வேண்டிய போதடியர் வேண்டிய போகமது*
*வேண்டவெ றாதுதவும் பெருமாளே"*

*"அடியவர் இச்சையில் எவையெவை உற்றன*
*அவைதரு வித்தருள் பெருமாளே"*

முருகா முருகா முருகா முருகா முருகா முருகா என்று எம்பெருமான் நாமத்தை உள்ளம் உருகிக் கூற வேண்டும்.

*"மொழியும்அடி யார்கள் கோடி*
*குறைகருதி னாலும் வேறு*
*முனியஅறி யாத தேவர் பெருமாளே."*

என்ற திருப்புகழ் முனிவர் கூறுகின்றார்.

அந்த முருக நாமத்தைச் சொல்லி அந்தப் பெருமானை வழிபடுகின்றார்கள் பக்த கோடிகள். அப்படி அடியார்கள் வழிபடுவதற்கு நிலைக்களமாக இருப்பது ஆலயம்.

பத்ராசலம் என்னும் தலத்தைக் கோபண்ணா திருப்பணி செய்து அழியாத புகழையும், புண்ணியத்தையும் பெற்றார்.

பாண்டிநாட்டு முதலமைச்சராயிருந்த மாணிக்க வாசகர் திருப்பெருந்துறையிலே ஆலயத் திருப்பணி செய்தார்.

அப்படியே பாண்டியரும் சோழரும் பல்லவரும் எத்தனை எத்தனையோ ஆலயத்தைக் கல்லினாலே செய்தார்கள்.

அப்படி இறைவனை ஆலயத்திலே வைத்து வழிபடுவதினாலே இகம், பரம், வீடு என்று மும்மை நலன்களும் நமக்கு உண்டாகும்.

ஆலய வழிபாடு இன்றியமையாதது. அது கலைகளுக்கெல்லாம் உறைவிடமானது; நம்முடைய தெய்வீகமான சக்தியை வெளிப்படுத்துவது. கலைச் சின்னங்கள் கோயில்களாகும்.

பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை கும்பாபிஷேகம் செய்ய வேண்டுமென்பார்கள். அப்படி கும்பாபிஷேகம் செய்வதினாலே அந்த மந்திர சக்தி கூடுதலாக அமையும். பல காலம் கும்பாபிஷேகம் செய்ய வில்லையானால் அந்தச் சக்தி தல விருட்சத்துக்குப் போகும். இன்னும் கொஞ்ச காலம் கழிந்தால் தல விருட்சத்தி

லிருந்து பராகாசம் அடையும். அப்போது அந்த மூர்த்தி இடத்தே இருக்கிற ஆற்றல் பரவெளியில் கலந்து விடும். அதற்காகத்தான் மகான்கள் பன்னிரண்டு ஆண்டு களுக்கு ஒருமுறை அல்லது குறைந்தது இருபத்தைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறையாவது மகா கும்பாபிஷேகம் அவசியமாகச் செய்வார்கள்.

ஆண்டவன் மந்திர யந்திர வடிவாக இருக்கின்றான். அதனாலே, அந்த மந்திர யந்திர வடிவத்தைச் சுவாமிக்கு அடியிலே மாத்ருகா மந்திரங்களை எல்லாம் எழுதி வைப்பர்.

*அக்ஷர லக்ஷ ஜபத்தர்க் ரமத்திடு*
*சக்ர தலத்தி திரியக்ஷ ஜடக்ஷரி*

என்று அருணகிரியார் பாடுகின்றார்.

அந்த மகான்கள் அட்சர லக்ஷங்களை எழுதி ஜபங்களை ஜபிப்பார்கள். அதனாலே அதனுடைய ஆற்றல் அதிகப்படுகிறது.

அந்தக் காலத்தில் இருந்த அரசர்கள் தானும் தன் மனைவியாரும் அணிகலன்களை எல்லாம் ஆண்ட வனுக்குச் சாத்தி அழகு பார்த்தார்கள்.

கொல்லூர் மூகாம்பிகைக்கு நளச்சக்ரவர்த்தி கொடுத்த பச்சை இன்னும் இருக்கின்றது. நளச் சக்ரவர்த்தி எந்தக் காலத்தில் வாழ்ந்தவரோ. அவர் இல்லை. அவர் கொடுத்த பச்சை இன்றைக்கும் மூகாம்பிகை கோவிலிலே இருக்கிறது.

ராஜ ராஜாக்கள் எல்லாம் தனி உடைமையைப் பொது உடைமையாகச் செய்தார்கள்.

எங்கே ஆலயங்கள் சிறப்பாக இருக்குமோ அங்கே குடிகள் உயரும். கோயில் உயரக் குடி உயரும். கோயில் குன்றினால் குடிகள் குன்றிப் போவார்கள்.

ஆலயங்களைத் தூய்மையாக வைத்துக் கொள்ள வேண்டும். ஆலயத்திலே சென்று தூய்மைக்கு மாறான காரியங்களைச் செய்யக் கூடாது.

யார் ஒருவர் கோயிலுக்கு அருகிலே சிறுநீர் கழிப்பார்களோ, அவர்களுக்கு மறுபிறப்பிலே சிறுநீரகக் கோளாறுகள் வரும்.

ஆலயத்திலே சென்று தூங்கியவர்கள் மறுபிறப்பில் மலைப்பாம்பாகப் பிறப்பார்கள்.

ஆலயத்திலே சென்றால் கொடி மரத்தின் அடியில் விழுந்து கும்பிட வேண்டும். உள்ளுக்குள் போய் விழுந்து கும்பிடக் கூடாது. ஆண்டவனைத் தவிர வேறு பொருள் களை நோக்கக் கூடாது. அங்கே இறைவனுடைய அருள்சத்தி சூட்சுமமாக தான் பல்வேறு வடிவங்களாக நமக்கு அருள்புரிகின்றான்.

இதைத்தான் அருணகிரியார் சொன்னார்,

*ஓல மறைகள் அறைகின்ற ஒன்றது*
*மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்*
*ஓத சரியை க்ரியையும் புணர்ந்தவர் எவராலும்*

ஒரே பொருள் அகில உலக நாயகனாக "ஏகம் ஏவா அத்வ தீயம் பிரம்மம்" என்று வேதம் சொல்லுகின்றது.

"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்" என்று திருமூலர் கூறிவார்.

இனி, கோயில் அமைப்பைப் பார்பபோம்.

இருதய ஸ்தானம்தான் மூலத்தானம்.

*உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானாற்கு வாய்கோ புரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலனைந்தும் காளா மணிவிளக்கே.*

என்பது திருமந்திரம்.

அன்னமய கோசம், பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்கின்ற பஞ்சமய கோசங்கள் பஞ்சப் பிரகாரம்.

மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுக்தி, ஆக்ஞை ஆக ஆறு ஆதாரங்களே மகா மண்டபம், அலங்கார மண்டபம், கல்யாண மண்டபம், நிருத்த மண்டபம், அர்த்த மண்டபம், கர்ப்பக்கிரகம் என்ற ஆறு மண்டபங்களாகும்.

கொடி மரந்தான் முதுகுத் தண்டு. முதுகுத் தண்டுக்கு நடுவே வெள்ளை நரம்பு. சுசும்னா நாடி ஓடுகின்றது. வளைந்து வளைந்து போகும் வெண்சாரைப் பாம்பைப் போல, இந்த முதுகுத் தண்டிலே அந்தச் சுழுமுனை என்ற வெள்ளை நரம்பு வளைந்து வளைந்து போகின்றது. அதைத்தான் ஆலயத்தில் கொடி மரத்திலே தர்ப்பைக் கயிற்றையும் வெள்ளைத் துணியையும் முறுக்கி வளைத்து வளைத்து மேலே ஏற்றுவார்கள்.

அந்தக் கொடிச்சீலை மேலே ஏறுவது சகஸ்ராரத்துக்கு ஆன்மா பிரயாணம் அடைவது. இந்தச் சகஸ்ராரம் என்பதுதான் நம்முடைய தலையின் உச்சி. அங்கே

ஆயிரத்தெட்டு இதழ்த் தாமரைக் கமலம், இங்கே ஆயிரத்தெட்டு நாடி நரம்புகள் பரந்து இருக்கும். இதைத்தான் அருணகிரிநாதர்,

*மேலை வெளியில் ஒளிரும் பரஞ்சுடர்*

என்கின்றார்.

வள்ளற் பெருமானுக்கு அந்த ஒளி தமது சிரசில் தெரியுமாம். அதனாலே, முக்காடு போர்த்தி மறைத்திருப்பாராம். ஆயிரங்கால் மண்டபம் சகஸ்ராரத்தைத் தெரிவிக்கும். சுவாமி, கொடியேறி விட்டால், வெளியே வருவார். ஆன்மாக்களுக்கெல்லாம் பக்குவத்தை உண்டாக்குகின்றார். சுவாமி திருவீதியுலா வருவது ஊரைப் பார்க்கவா? கோயில் உள்ளே சென்று சேவிக்க மாட்டாத மக்களுக்காக (ஜனனா சௌசம், மரணா சௌசம் உள்ளவர்கள் ஸ்நானம் பண்ணாமல் உள்ளே சென்று சேவிக்க முடியாது.) சுவாமி வெளியே வந்து காட்சி கொடுக்கின்றார்.

சுவாமி நந்தனவனத்திலே விழா கொண்டாடுவார். அங்கே பத்ர புஷ்பங்கள் தருகின்ற அந்தச் செடி கொடிகளுக்கும் மேல் பிறப்பு வரும் பொருட்டு.

குளத்தில் உள்ள மீன் முதலான ஜல வாழ் பிராணிகளுக்கு மேல் பிறப்பைத் தரும் பொருட்டுப் பெருமான், அந்தக் குளத்திற்குப்போய்த் தெப்ப விழா கொண்டாடுவார்.

இவையெல்லாம் ஆன்மாக்கள் நன்மைக்காகவே ஆண்டவன் செய்கின்றான்.

ஒரு வயதான கிழவி, பல்லில்லாத கிழவி சீடை சுடுவாள்; பேரக் குழந்தைகளுக்காக.

அதேபோல், இறைவன் நமக்கு அம்மையும் அப்பனுமாக இருந்து உதவுகின்றான்.

பிறவிகள்தோறும் அவன்தான் அம்மையும் அப்பனும்.

*"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே"*

என்பார் மணிவாசகப் பெருந்தகை.

நமக்கு மட்டுமா, செடி, கொடி, ஆடு, மாடு, பல்லி, ஓணான் எல்லாவற்றுக்கும் அவன்தான் தாயார்.

*சடையானை எவ்வுயிர்க்குந் தாயா னானை*
*சங்கரனை சசிகண்ட மவுலி யானை*
*விடையானை வேதியனை வெண்ணீற் றானை*
*விரவாதார் புரமூன்றும் எரியச் செற்ற*
*படையானை."*

என்பது அப்பர் பெருமான் திருவாக்கு.

எவ்வுயிர்க்கும் அம்மாவாக இருக்கின்றான் ஆண்டவன். பக்குவப்பட்ட உயிர்களுக்கு அப்பாவாக இருப்பான். பக்குவப்படாத எல்லா உயிர்க்கும் அம்மா வாய் இருப்பான். அதனால்தான் "அம்மே, அப்பா" என்று அழைத்தார் ஞானசம்பந்தர்.

*மெய்ம்மேற்கண் துளிபனிப்ப மேறெங்கும் பார்த்தழுவார்*
*தம்மேலைச் சார்புணர்ந்தோ சாரும்பிள் ளைமைதானோ*
*செம்மேனி வெண்ணீற்றார் திருத்தோணி சிகரம்பார்த்து*
*அம்மே அப்பாவென்று அழைத்தருளி அழுதருள.*

ஞானசம்பந்தப் பெருமானின் அப்பா மறைந்தது குளத் தண்ணீரிலே. அந்தக் குளத்தைப் பார்த்து அழாமல், சிகரத்தைப் பார்த்து அழுகின்றாராம். அவர்தானே அம்மையும் அப்பனும்.

இறைவன் அகில உலகத்துக்கும் அம்மையும்

அப்பனுமாக இருக்கின்றான். அவன் நமக்காக அந்தக் கோவிலில் உள்ள உருவத்திலே தோன்றி அருள் புரிகின்றான்.

அந்தக் கொடியேறுவது சுழுமுனையிலே பிராண வாயு சகஸ்ராரத்துக்குப் போவதைத் தெரிவிக்கும்.

ஆண்டவன் ஒவ்வொரு வாகனங்களிலே வருவ தெல்லாம் ஒவ்வொர் உண்மையைத் தெரிவிக்கும்.

ஆலயத்தில் அர்ச்சை (மூர்த்தி) வடிவாக இருந்து அருள்புரிகின்றார்.

சிவஞானிகளும் வணங்க வேண்டியது ஆலயம். அந்த ஆலயத்தில் காலங்கள்தோறும் வழிபாடு நடக்க வேண்டும்.

*முன்னவனார் கோயில் பூசைகள் முட்டிடின்*
*மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றும்*
*கன்னங் களவு மிகுத்திடும் காசினி*
*என்னரும் நந்தி எடுத்துரைத் தானே.*

என்பது திருமந்திரம்.

ஆலய வழிபாட்டை சுருக்கமாக மீண்டும் சொல்கிறேன்.

தேவாலயத்திற்குச் செல்லுதற்குமுன் நீராடி, நீறாடி தோய்த்து உலர்ந்த ஆடையை உடுத்தி, அனுஷ்டானங் களை முடித்துத் தேங்காய், பழம், தாம்பூலம், கற்பூரம் முதலியவற்றை எடுத்துக் கொண்டு பாதசாரியாகத் தேவாலயத்தை நெருங்கி, அங்குள்ள தீர்த்தத்தில் கை, கால்களைச் சுத்தப்படுத்திக் கொண்டு திருக் கோபுரத்தைத் தரிசித்துத் தெய்வ சிந்தனையுடன் கோயிலுக்குள் செல்ல வேண்டும்.

உள்ளே சென்றதும் பலி பீடத்தையும் கொடி மரத்தையும் சிவாலயமாயின் நந்தி தேவரையும், விஷ்ணு ஆலயமாயின் பெரிய திருவடியாகிய கருடாழ்வாரையும் வணங்கி உள்ளே செல்ல அனுமதி பெற்றுச் செல்ல வேண்டும்.

அபிஷேக நிவேதனம் இல்லாத நேரத்தில் சந்நிதிக்கு முன் ஆடவர் அஷ்டாங்க நமஸ்காரமும் (தலை, கையிரண்டு, இரண்டு காதுகள், இரண்டு முழந்தாள், மார்பு - இந்த எட்டுறுப்பும் பூமியில் பொருந்தும்படி வணங்கல்) பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் (கையிரண்டு, முழந்தாள் இரண்டு, தலை இவ்வைந்தும் பூமியில் பொருந்தும்படி வணங்கல்.) 3, 5, 7, 9, 12 முறை செய்தல் வேண்டும்.

பின், சந்நிதானத்துக்கு உள்புகுந்து துவாரபாலகரை வணங்கி, அனுமதி பெற்றுச் சந்நிதானம் அடைந்து அங்கிருக்கும் அருச்சகரிடம் தாம் கொண்டு சென்ற பொருட்களைத் தந்து தேவாராதனை செய்யத் தரிசித்துக் கடவுளுக்குத் தன் முதுகைக் காட்டாது திரும்ப வேண்டும்.

திரும்பிக் கைகளைக் குவித்துத் தெய்வ தோத்திரங்களைச் செய்து கொண்டு மூன்று முதல் இருபத்தொன்று வரை ஒற்றையாக வலம்வர வேண்டும்.

அவ்வாறே தேவியர் சந்நிதியுள் புகுந்து நான்கு முறை வணங்கித் தரிசனம் செய்து கொண்டு வீட்டிற்குத் திரும்ப வேண்டும்.

திருக்கோயிலுக்குள் ஆசாரமில்லாது போவது, மூக்குச் சிந்துதல், எச்சில் துப்புதல், தாம்பூலந் தரித்தல், பலகாரங்களைச் சாப்பிடுதல்,தூங்குதல், ஆசனத்தில்,



காலை நீட்டிக் கொண்டு இருத்தல், மயிர் முடித்தல், தலையிலும் தோளிலும் வஸ்திரங்களை அணிந்து கொண்டு செல்லல், கோபுரம், கொடிமரம், விக்கிரகங்கள் நிழலை மிதித்தல், தாண்டுதல், வீண்வார்த்தை பேசுதல், சிரித்தல், விளையாடல், சுவாமிக்கும் பலிபீடத்துக்கும் நடுவில் செல்லுதல், ஒருமுறை இருமுறை வலம் வருதல், அகாலத்தில் தரிசித்தல், அபிஷேக நிவேதன காலங் களில் தரிசித்தல், வீதி உற்சவங் கொண்டருளும் போது கோயிலுள் புகுந்து வணங்குதல் முதலியன கூடாது.

ஆலயத்தில் வாசலில்லா வழியில் நுழைந்து போகக் கூடாது. வெளிச்சம் இல்லா இடத்தில் மலர் மாலை தொடுக்கக் கூடாது. வீண் காரியம் செய்யக்கூடாது.

இறைவனது உடைமைகளைத் தன் பொருட்டு உபயோகித்துக் கொள்ளக்கூடாது.

வழிபாடு முற்றிய காலத்திலே கும்பாபிஷேகம் அவசியம் செய்து வழிபட வேண்டும்.

கும்பாபிஷேகம் செய்வது அந்த மூர்த்தியின் மூர்த்திகரத்தைப் புதுப்பிப்பதாகும்.

கும்பாபிஷேகத் தத்துவத்தை இந்த அளவிலே சொல்லி எல்லா ஆலயங்களும் ஓங்கி வளர்க என்று சுவாமியைப் பிரார்த்திக்கின்றேன்.

*வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்*
*வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக*
*ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே*
*சூழ்க வையகமும் துயர் தீர்கவே.*

❑ ❑ ❑







குகஸ்ரீ வாரியார் பதிப்பகம்
சென்னை - 600 002. போன் : 044 2845 7666.
Web: www.variyarswamigal.com; Email: guhashri@gmail.com

 Guhashri Vaariyaar Pathipagam; Variyar Swamigal

**கும்பாபிஷேக மகிமை** ₹ 28.00